

# சிவோஹம் பாராயணத் தொகுப்பு
# சிவார்ப்பண மஞ்சரி - 114

## திருஞானசம்பந்தரின் அற்புதத் திருப்பதிகங்கள்

அடியார்கள் அனைவரும் ஸ்ரீ திருஞானசம்பந்தரின் அருள்பெற அர்ப்பணிப்பு

சிவோஹம் சிவார்ப்பண ஞானதானம் - 2025 05/24 சனி ப்ரதோஷம்

**திருஞானசம்பந்தர் குருபூஜை: 12/06/2025 சோமவாரம்**

அருள்மிகு திரிசூலநாதர் திருக்கோயில் - திரிசூலம் சென்னை

# திருஞானசம்பந்தரின் அற்புதத் திருப்பதிகங்கள்

**முதல் திருமுறை 1.001 திருப்பிரமபுரம்**

அற்புதம்: ஞானப்பால் உண்டது. பதிகப்பலன்: குருவருள் பெற / தொல்வினை தீர

பண் - நட்டபாடை (கம்பீர நாட்டை) தாளம்: ரூபகம்/ஆதி (12-34-56-78)

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் உள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 1

முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னாப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால்தொழு தேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 2

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரஎன் னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய ஓரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 3

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தஅர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பில்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 4

ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்மிவனென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 5

மறைகலந்தஒலி பாடலோடாடல ராகிமழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளைசோரஎன் னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழில்நீடுயர் சோலைக்கதிர் சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 6

சடைமுயங்குபுன லன்னனலன்னெரி வீசிச்சதிர்வெய்த
உடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்
கடல்முயங்குகழி சூழ்குளிர்கானலம் பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 7

வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர்கள்வன்
துயரிலங்கும்முல கிற்பலஊழிகள் தோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 8

தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்
நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 9

புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா
ஒத்தசொல்லவுல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயம்மிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 10

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 1.023. திருக்கோலக்கா - 02

அற்புதம்: பொற்றாளம் பேற்றது. பதிகப்பலன்: குழந்தைகள் கல்வி & பேச்சுத்திறன் பெருக, வினைகள் ஒழிந்து உயர்வாக வாழ

பண் - தக்கராகம் (காம்போதி) தாளம்: ஆதி (1-2-3-4-5-6-7-8)

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையும் சாம்பல் பூச்சுங்கீழ்
உடையும் கொண்ட உருவம் என்கொலோ. 1

பெண்டான் பாக மாகப் பிறைச்சென்னி
கொண்டான் கோலக் காவு கோயிலாக்
கண்டான் பாதங் கையாற் கூப்பவே
உண்டான் நஞ்சை உலகம் உய்யவே. 2

பூணற் பொறிகொ ளரவம் புன்சடை
கோணற் பிறையன் குழகன் கோலக்கா
மாணப் பாடி மறைவல் லானையே
பேணப் பறையும் பிணிக ளானவே. 3

தழுக்கொள் பாவந் தளர வேண்டுவீர்
மழுக்கொள் செல்வன் மறிசேர் அங்கையான்
குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா
இழுக்கா வண்ணம் ஏத்தி வாழ்மினே. 4

மயிலார் சாயல் மாதோர் பாகமா
எயிலார் சாய எரித்த எந்தைதன்
குயிலார் சோலைக் கோலக் காவையே
பயிலா நிற்கப் பறையும் பாவமே. 5.

வெடிகொள் வினையை வீட்ட வேண்டுவீர்
கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்
கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்
அடிகள் பாதம் அடைந்து வாழ்மினே. 6

நிழலார் சோலை நீல வண்டினங்
குழலார் பண்செய் கோலக் காவுளான்
கழலால் மொய்த்த பாதங் கைகளால்
தொழலார் பக்கல் துயர மில்லையே. 7

எறியார் கடல்சூழ் இலங்கைக் கோன்றனை
முறியார் தடக்கை அடர்த்த மூர்த்திதன்
குறியார் பண்செய் கோலக் காவையே
நெறியால் தொழுவார் வினைகள் நீங்குமே. 8

நாற்ற மலர்மே லயனும் நாகத்தில்
ஆற்ற லணைமே லவனுங் காண்கிலாக்
கூற்ற முதைத்த குழகன் கோலக்கா
ஏற்றான் பாத மேத்தி வாழ்மினே. 9

பெற்ற மாசு பிறக்குஞ் சமணரும்
உற்ற துவர்தோ யுருவி லாளருங்
குற்ற நெறியார் கொள்ளார் கோலக்காப்
பற்றிப் பரவப் பறையும் பாவமே. 10

நலங்கொள் காழி ஞானசம் பந்தன்
குலங்கொள் கோலக் காவு ளானையே
வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்
உலங்கொள் வினைபோய் ஓங்கி வாழ்வரே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 1.044. திருப்பாச்சிலாச்சிராமம் - 03

அற்புதம்: முயலகன் நோய் நீங்கியது . பதிகப்பலன்: நரம்பு சம்மந்தமான நோய், மதி இறுக்கம், முடக்குவாதம், இரத்த அழுத்தம், சர்க்கரை நோய், ஆகியவை தீர, குடி போதையிலிருந்து விலக, வினைகள் தீர,

பண் - தக்கராகம் (காம்போதி) தாளம்: ஆதி (1-2-3-4-5-6-7-8)

துணிவளர்திங்கள் துளங்கிவிளங்கச் சுடர்ச்சடை சுற்றிமுடித்துப்
பணிவளர்கொள்கையர் பாரிடஞ்சூழ வாரிடமும் பலிதேர்வர்
அணிவளர்கோல மெலாஞ்செய்துபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
மணிவளர்கண்டரோ மங்கையைவாட மயல்செய்வதோ இவர்மாண்பே 1

கலைபுனைமானுரி தோலுடையாடை கனல்சுட ராலிவர்கண்கள்
தலையணிசென்னியர் தாரணிமார்பர் தம்மடிகள் இவரென்ன
அலைபுனல் பூம்பொழில் சூழ்ந்தமர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
இலைபுனைவேலரோ ஏழையைவாட இடர்செய்வதோ இவரீடே. 2

வெஞ்சுடராடுவர் துஞ்சிருள்மாலை வேண்டுவர்பூண்பது வெண்ணூல்
நஞ்சடைகண்டர் நெஞ்சிடமாக நண்ணுவர் நம்மைநயந்து
மஞ்சடைமாளிகை சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
செஞ்சுடர்வண்ணரோ பைந்தொடிவாடச் சதைசெய்வதோ இவர்சாரே .3

கனமலர்க்கொன்றை அலங்கலிலங்கக் கனல்தரு தரமதிக்கண்ணி
புனமலர்மாலை யணிந்தழகாய புநிதர்கொ லாமிவரென்ன
வனமலிவண்பொழில் சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற,
மனமலிமைந்தரோ மங்கையைவாட மயல்செய்வதோ இவர்மாண்பே. 4

மாந்தர்தம்பால்நறு நெய்மகிழ்ந்தாடி வளர்சடை மேற்புனல்வைத்து
மோந்தைமுழாக்குழல் தாளமொர்வீணை முதிரவோர்வாய் மூரிபாடி
ஆந்தைவிழிச்சிறு பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
சாந்தணிமார்பரோ தையலைவாடச் சதுர்செய்வதோ இவர்சார்வே 5

நீறுநெய்பூசி நிறைசடைதாழ நெற்றிக்கண் ணாலுற்றுநோக்கி
ஆறதுசூடி ஆடரவாட்டி யைவிரற் கோவணவாடை
பார்தருமேனியர் பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
ஏறதுவேறிய ரேழையைவாட இடர்செய்வதோ இவரீடே. 6

பொங்கிளநாகமொ ரேகவடத்தோ டாமைவெண் ணூல்புனைகொன்றை
கொங்கிளமாலை புனைந்தழகாய குழகர்கொலாமிவரென்ன
அங்கிளமங்கையோர் பங்கினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
சங்கொளிவண்ணரோ தாழ்குழல்வாடச் சதிர்செய்வதோ இவர்சார்வே. 7

ஏவலத்தால்விச யற்கருள்செய்து இராவண னையீடழித்து
மூவரிலும்முத லாய்நடுவாய மூர்த்தியை அன்றிமொழியாள்
யாவர்களும்பர வும்மெழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
தேவர்கள்தேவரோ சேயிழைவாடச் சிதைசெய்வதோ இவர்சார்வே. 8

மேலதுநான்முக னெய்தியதில்லை கீழது சேவடிதன்னை
நீலதுவண்ணனு மெய்தியதில்லை எனவிவர் நின்றதுமல்லால்
ஆலதுமாமதி தோய்பொழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
பாலதுவண்ணரோ பைந்தொடிவாடப் பழிசெய்வதோ இவர்பண்பே. 9

நாணொடுகூடிய சாயினரேனும் நகுவர் இவரிருபோதும்
ஊணொடுகூடிய வுட்குநகையா லுரைகளவைகொள வேண்டா
ஆணொடுபெண்வடி வாயினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
பூணொடுமார்பரோ பூங்கொடிவாடப் புனைசெய்வதோ இவர்பொற்பே. 10

அகமலியன்பொடு தொண்டர்வணங்க ஆச்சிரா மத்துறைகின்ற
புகைமலிமாலை புனைந்தழகாய புனிதர்கொலாம் இவரென்ன
நகைமலிதண்பொழில் சூழ்தருகாழி நற்றமிழ்ஞான சம்பந்தன்
தகைமலிதண்டமிழ் கொண்டிவையேத்தச் சாரகிலா வினைதானே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 1.049. திருநள்ளாறு - 04

அற்புதம்: மதுரை அனல்வாதம் வென்றது. பதிகப்பலன்: சனி கிரகத்தால் வரும் அத்துனை இடர்களும் தீர.

பண் - பழந்தக்கராகம் (சுத்த சாவேரி) தாளம்: ஆதி (12-34-56-78)

போகமார்த்த பூண்முலையாள் தன்னோடும்பொன் னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள்ளேற் றண்ணல்பர மேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவணஆ டையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயதுநள் ளாறே. 1

தோடுடைய காதுடையன் தோலுடையன் தொலையாப்
பீடுடைய போர்விடையன் பெண்ணுமோர்பா லுடையன்
ஏடுடைய மேலுலகோ டேழ்கடலுஞ் சூழ்ந்த
நாடுடைய நம்பெருமான் மேயதுநள் ளாறே. 2

ஆன்முறையா லாற்றவெண்ணீ றாடியணி யிழையோர்
பான்முறையால் வைத்தபாதம் பத்தர்பணிந் தேத்த
மான்மறியும் வெண்மழுவுங் கூலமும்பற் றியகை
நான்மறையான் நம்பெருமான் மேயதுநள் ளாறே. 3

புல்கவல்ல வார்சடைமேற் பூம்புனல் பெய்தயலே
மல்கவல்ல கொன்றைமாலை மதியோடுடன் சூடிப்
பல்கவல்ல தொண்டர்தம்பொற் பாதநிழற் சேர
நல்கவல்ல நம்பெருமான் மேயதுநள் ளாறே. 4

ஏறுதாங்கி யூர்திபேணி யேர்கொளிள மதியம்
அறுதாங்குஞ் சென்னிமேலோ ராடரவஞ் சூடி
நீறுதாங்கி நூல்கிடந்த மார்பினிரை கொன்றை
நாறுதாங்கு நம்பெருமான் மேயதுநள் ளாறே. 5

திங்களுச்சி மேல்விளங்குந் தேவனிமை யோர்கள்
எங்களுச்சி யெம்மிறைவ னென்றடியே யிறைஞ்சத்
தங்களுச்சி யால்வணங்குந் தன்னடியார் கட்கெல்லாம்
நங்களுச்சி நம்பெருமான் மேயதுநள் ளாறே. 6

வெஞ்சுடர்த்தீ யங்கையேந்தி விண்கொண்முழ வதிர
அஞ்சிடத்தோ ராடல்பாடல் பேணுவதன்றி யும்போய்ச்
செஞ்சடைக்கோர் திங்கள்சூடித் திகழ்தருகண் டத்துள்ளே
நஞ்சடைத்த நம்பெருமான் மேயதுநள் ளாறே, 7

சிட்டமார்ந்த மும்மதிலுஞ் சலைவரைத்தீ யம்பினால்
சுட்டுமாட்டிச் சுண்ணவெண்ணீ றாடுவதன் றியும்போய்ச்
பட்டமார்ந்த சென்னிமேலோர் பால்மதியஞ் கூடி
நட்டமாடு நம்பெருமான் மேயதுநள் ளாறே, 8

உண்ணலாகா நஞ்சுகண்டத் துண்டுடனே யொடுக்கி
அண்ணலாகா வண்ணனீழ லாரழல்போ லுருவம்
எண்ணலாகா வுள்வினையென் றெள்கவலித் இருவர்
நண்ணலாகா நம்பெருமான் மேயதுநள் ளாறே. 9

மாசுமெய்யர் மண்டைத்தேரர் குண்டர்குண மிலிகள்
பேசும்பேச்சை மெய்யென்றெண்ணி யந்நெறிசெல் லன்மின்
மூசுவண்டார் கொன்றைகுடி மும்மதிளும் முடனே
நாசஞ்செய்த நம்பெருமான் மேயதுநள் ளாறே. 10

தண்புனலும் வெண்பிறையுந் தாங்கியதாழ் சடையன் -
தண்புநல்லார் மல்குகாழி ஞானசம்பந் தன்நல்ல
பண்புநள்ளா றேத்துபாடல் பத்துமிவை வல்லார்
உண்புநீங்கி வானவரோ டுலகிலுறை வாரே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 1.054. திருவோத்தூர் - 05

அற்புதம்: ஆண்பனை பெண்பனை ஆக்கியது, பதிகப்பலன்: குழந்தை பாக்கியம் கிடைக்க,

பண் - பழந்தக்கராகம் (ஆரபி) தாளம்: ஆதி (12-34-56-78)

பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி.
ஏத்தா தாரில்லை யெண்ணுங்கால்
ஓத்தூர் மேய வொளிமழு வாளங்கைக்
கூத்தி ரும்ம குணங்களே. 1

இடையீர் போகா இளமுலை யாளையோர்
புடையீ ரேபுள்ளி மானுரி
உடையி ரேயும்மை யேத்துது மோத்தூர்ச்
சடையீ ரேயும தாளே. 2

உள்வேர் போல நொடிமையி னார்திறம்
கொள்வீ ரல்குலோர் கோவணம்
ஒள்வா ழைக்கனி தேன்சொரி யோத்தூர்க்
கள்வீ ரேயும காதலே. 3

தோட்டீ ரேதுத்தி யைந்தலை நாகத்தை
ஆட்டீ ரேயடி யார்வினை
ஒட்டீ ரேயும்மை யேத்துது மோத்தூர்
நாட்டீ ரேயருள் நல்குமே. 4

குழையார் காதர் கொடுமழு வாட்படை.
உழையாள் வீர்கிரு வோத்தூர்
பிழையா வண்ணங்கள் பாடிநின் நாடுவார்
அழையா மேயருள் நல்குமே. 5

மிக்கார் வந்து விரும்பிப் பலியிடத்
தக்கார் தம்மக்க ளீரென்று
உட்கா தாருள ரோதிரு வோத்தூர்
நக்கீ ரேயருள் நல்குமே. 6

தாதார் கொன்றை தயங்கு முடியுடை
நாதா என்று நலம்புகழ்ந்
தோதா தாருள ரோதிரு வோத்தூர்
ஆதீ ரேயருள் நல்குமே. 7

என்றா னிம்மலை யென்ற அரக்கனை
வென்றார் போலும் விரலினால்
ஒன்றார் மும்மதி லெய்தவ னோத்தூர்
என்றார் மேல்வினை யேகுமே. 8

நன்றா நான்மறை யானொடு மாலுமாய்ச்
சென்றார் போலுந்தி சையெலாம்
ஒன்றா யொள்ளெரி யாய்மிக வோத்தூர்
நின்றீ ரேயுமை நேடியே. 9

கார மண்கலிங் கத்துவ ராடையர்
தேரர் சொல்லவை தேறன்மின்
ஓரம் பாலெயி லெய்தவ னோத்தூர்ச்
சீர வன்கழல் சேர்மினே. 10

குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்பு கலியுள் ஞானசம்பந் தன்சொல்
விரும் புவார்வினை வீடே. 11

**திருச்சிற்றம்பலம்.**

## 1.092. திருவீழிமிழலை - 06

அற்புதம்:படிக்காசு கிடைக்கப்பாடியது.பதிகப்பலன்: பொருளாதாரம் மேம்பட

பண் - குறிஞ்சி (அரிகாம்போதி) தாளம்: ஆதி (1-2-3-4-5-6-7-8)

வாசி தீரவே, காசு நல்குவீர்
மாசின் மிழலையீர், ஏச லில்லையே. 1

இறைவ ராயினீர், மறைகொள் மிழலையீர்
கறைகொள் காசினை, முறைமை நல்குமே. 2

செய்ய மேனியீர், மெய்கொள் மிழலையீர்
பைகொ ளரவினீர், உய்ய நல்குமே. 3

நீறு பூசினீர், ஏற தேறினீர்
கூறு மிழலையீர், பேறு மருளுமே. 4

காமன் வேவவோர், தூமக் கண்ணினீர்
நாம மிழலையீர், சேம நல்குமே. 5

பிணிகொள் சடையினீர், மணிகொள் மிடறினீர்
அணிகொள் மிழலையீர், பணிகொண் டருளுமே. 6

மங்கை பங்கினீர், துங்க மிழலையீர்
கங்கை முடியினீர், சங்கை தவிர்மினே. 7

அரக்கன் நெரிதர, இரக்க மெய்தினீர்
பரக்கு மிழலையீர், கரக்கை தவிர்மினே. 8

அயனு மாலுமாய், முயலு முடியினீர்
இயலு மிழலையீர், பயனு மருளுமே. 9

பறிகொள் தலையினார், அறிவ தறிகிலார்
வெறிகொள் மிழலையீர், பிறிவ தரியதே. 10

காழி மாநகர், வாழி சம்பந்தன்
வீழி மிழலைமேல், தாழு மொழிகளே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 1.116. பொது - 07

அற்புதம்: சுரநோய் நீங்கியது. பதிகப்பலன்: தொற்று நோய் நீங்கிட, செய்வினை மற்றும் தீவினை நீங்க

பண் - வியாழக்குறிஞ்சி (சௌராஷ்டிரம்) தாளம்: ஆதி (12-34-56-78)

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 1

காவினை யிட்டுங் குளம்பல தொட்டுங் கனிமனத்தால்
ஏவினை யாலெயில் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்
தீவினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 2

முலைத்தட மூழ்கிய போகங்களுமற் றெவையு மெல்லாம்
விலைத்தலை யாவணங் கொண்டெமை யாண்ட விரிசடையீர்
இலைத்தலைச் சூலமுந் தண்டும் மழுவு மிவையுடையீர்
சிலைத்தெமைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 3

விண்ணுல காள்கின்ற விச்சா தரர்களும் வேதியரும்
புண்ணிய ரென்றிரு போதுந் தொழப்படும் புண்ணியரே
கண்ணிமை யாதன மூன்றுடை யீருங் கழலடைந்தோம்
திண்ணிய தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 4

மற்றிணை யில்லா மலைதிரண் டன்னதிண் டோளுடையீர்
கிற்றெமை யாட்கொண்டு கேளா தொழிவதுந் தன்மைகொல்லோ
சொற்றுணை வாழ்க்கை துறந்துந் திருவடி யேயடைந்தோம்
செற்றெமைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 5

மறக்கும் மனத்தினை மாற்றியெம் மாவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் திருந்தடிக் கீழ்ப்பிழை யாதவண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமை யேத்தும் பணியடியோம்
சிறப்பிலித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 6

கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே
உருகி மலர்கொடு வந்துமை யேத்துதும் நாமடியோம்
செருவி லரக்கனைச் சீரி லடர்த்தருள் செய்தவரே
திருவிலித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 8

நாற்ற மலர்மிசை நான்முகன் நாரணன் வாதுசெய்து
தோற்ற முடைய அடியும் முடியுந் தொடர்வரியீர்
தோற்றினுந் தோற்றுந் தொழுது வணங்குதும் நாமடியோம்
சீற்றம தாம்வினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 9

சாக்கியப் பட்டுஞ் சமணுரு வாகி யுடையொழிந்தும்
பாக்கிய மின்றி யிருதலைப் போகமும் பற்றும்விட்டார்
பூக்கமழ் கொன்றைப் புரிசடை யீரடி போற்றுகின்றோம்
தீக்குழித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 10

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவியுண் டாகி லிமையவர் கோனடிக்கண்
திறம்பயில் ஞானசம் பந்தன செந்தமிழ் பத்தும்வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 2.018. திருமருகல் - 08

அற்புதம்: விடந்தீர்த்த பதிகம். பதிகப்பலன்: திருமணம் கைகூட

பண் - இந்தளம் (மாயாமாளவகௌளை) தாளம்: ஆதி (1-2-3-4-5-6-7-8)

சடையா யெனுமால் சரண்நீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே. 1

சிந்தா யெனுமால் சிவனே யெனுமால்
முந்தா யெனுமால் முதல்வா எனுமால்
கொந்தார் குவளை குலவும் மருகல்
எந்தாய் தகுமோ இவளே சறவே. 2

அறையார் கழலும் மழல்வாய் யரவும்
பீறையார் சடையும் முடையாய் பெரிய
மறையார் மருகல் மகிழ்வாய் யிவளை
இறையார் வளைகொண் டெழில்வவ் வினையே. 3

ஒலிநீர் சடையிற் கரந்தாய் யுலகம்
பலிநீ திரிவாய் பழியில் புகழாய்
மலிநீர் மருகல் மகிழ்வாய் யிவளை
மெலிநீர் மையளாக் கவும்வேண் டினையே. 4

துணிநீ லவண்ணம் முகில்தோன் றியன்ன
மணிநீ லகண்ட முடையாய் மருகல்
கணிநீ லவண்டார் குழலாள் இவள்தன்
அளிநீ லவொண்கண் அயர்வாக் கினையே. 5

பலரும் பரவப் படுவாய் சடைமேல்
மலரும் பிறையொன் றுடையாய் மருகல்
புலருந் தனையுந் துயிலாள் புடைபோந்
தலரும் படுமோ அடியா ளிவளே. 6

வழுவாள் பெருமான் கழல்வாழ் கவெனா
எழுவாள் நினைவாள் இரவும் பகலும்
மழுவா ளுடையாய் மருகற் பெருமான்
தொழுவா ளிவளைத் துயராக் கினையே. 7

இலங்கைக் கிறைவன் விலங்கல் எடுப்பத்
துலங்கவ் விரலூன் றலுந்தோன் றலனாய்
வலங்கொள் மதில்சூழ் மருகற் பெருமான்
அலங்கல் இவளை யலராக் இனையே. 8

எரியார் சடையும் அடியும் இருவர்
தெரியா .ததொர்தீத் திரளா யவனே
மரியார் பிரியா மருகற் பெருமான்
அரியாள் இவளை அயர்வாக் இனையே. 9

அறிவில் சமணும் மலர்சாக் இயரும்
நெறியல் லனசெய் தனர்நின் றுழல்வார்
மறியேந் துகையாய் மருகற் பெருமான்
நெறியார் குழலி நிறைநீக் கினையே. 10

வயஞா னம்வல்லார் மருகற் பெருமான்
உயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலால்
இயன்ஞா னசம்பந் தனபா டல்வல்லார்
வியன்ஞா லமெல்லாம் விளங்கும் புகழே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 2.37. திருமறைக்காடு - 09

அற்புதம்: மறைக்கதவம் அடைக்கப் பாடிய பதிகம். பதிகப்பலன்: உலகோர் தொழும் திருக்கயிலாயம் அடைய

பண் - இந்தளம் (மாயாமாளவகௌளை) தாளம்: ஆதி (1-2-3-4-5-6-7-8)

சதுரம் மறைதான் துதிசெய் துவணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
இதுநன் கிறைவைத் தருள்செய்க வெனக்குன்
கதவந் திருக்காப் புக்கொள்ளுங் கருத்தாலே. 1

சங்கந் தரளம் அவைதான் கரைக்கெற்றும்
வங்கக் கடல்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
மங்கை யுமைபா கமுமா கவிதென்கொல்
கங்கை சடைமே லடைவித் தகருத்தே. 2

குரவங் குருக்கத் திகள்புன் னைகள்ஞாழல்
மருவும் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
சிரமும் மலருந் திகழ்செஞ் சடைதன்மேல்
அரவம் மதியோ டடைவித் தலழகே. 3

படர்செம் பவளத் தொடுபன் மலர்முத்தம்
மடலம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
உடலம் முமைபங் கமதாகியு மென்கொல்
கடல்நஞ் சமுதா வதுவுண் டகருத்தே. 4

வானோர் மறைமா தவத்தோர் வழிபட்ட
தேனார் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா
ஏனோர் தொழுதேத்த இருந்தநீ யென்கொல்
கானார் கடுவே டுவனா னகருத்தே. 5

பலகா லங்கள்வே தங்கள்பா தங்கள்போற்றி
மலரால் வழிபா டுசெய்மா மறைக்காடா
உலகே முடையாய் கடைதோ றும்முன்னென்கொல்
தலைசேர் பலிகொண் டதிலுண் டதுதானே. 6

வேலா வலயத் தயலே மிளிர்வெய்தும்
சேலார் திருமா மறைக்காட் டுறைசெல்வா
மாலோ டயனிந் திரனஞ் சமுனென்கொல்
காலார் சிலைக்கா மனைக்காய்ந் தகருத்தே. 7

கலங்கொள் கடலோ தமுலா வுங்கரைமேல்
வலங்கொள் பவர்வாழ்த் திசைக்கும் மறைக்காடா
இலங்கை யுடையா எடர்ப்பட் டிடரெய்த
அலங்கல் விரலூன் றியருள் செய்தவாறே. 8

கோனென் றுபல்கோ டியுருத் திரர்போற்றும்
தேனம் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா
ஏனங் கழுகா னவருன் னைமுனென்கொல்
வானந் தலமண் டியுங்கண் டிலாவாறே. 9

வேதம் பலவோ மம்வியந் தடிபோற்ற
ஒதம் முலவும் மறைக்காட் டிலுறைவாய்
ஏதில் சமண்சாக் கியர்வாக் கவையென்கொல்
ஆத ரொடுதா மலர்தூற் றியவாறே. 10

காழிந் நகரான் கலைஞான சம்பந்தன்
வாழிம் மறைக்கா டனைவாய்ந் தறிவித்த
ஏழின் னிசைமா லையீரைந் திவைவல்லார்
வாழியுலகோர் தொழவா னடைவாரே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 2.47. திருமயிலாப்பூர் - 10

அற்புதம்: பூம்பாவையை எழுப்பிய திருப்பதிகம். பதிகப்பலன்: எலும்பு சம்பந்தமான நொய்கள் அகல

பண் - சீகாமரம் (நாதநாமக்ரியா) தாளம்: ஆதி (12-34-56-78)

மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய். 1

மைப்பயந்த ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணாதே போதியோ பூம்பாவாய். 2

வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்தொல் கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய். 3

ஊர்திரை வேலை உலாவும் உயர்மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்
கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய். 4

மைப்பூசு மொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
நெய்ப்பூசு வொண்புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்.
தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய். 5

மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
அடலா னேறூரும் அடிக ளடிபரவி
நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய் 6

மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
பலிவிழாப் பாடல்செய் பங்குனி உத்திரநாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ பூம்பாவாய். 7

தண்ணா வரக்கன்றோள் சாய்த்துகந்த தாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச் சரமமர்ந்தான்
பண்ணார் பதினெண் கணங்கள்தம் அட்டமிநாள்
கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய். 8

நற்றா மறைமலர்மேல் நான்முகனும் நாரணனும்
உற்றாங் குணர்கிலா மூர்த்தி திருவடியைக்
கற்றார்க ளேத்துங் கபாலீச் சரமமர்ந்தான்
பொற்றாப்பு காணாதே போதியோ பூம்பாவாய். 9

உரிஞ்சாய வாழ்க்கை அமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரமமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய். 10

கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்தன் நலம்புகழ்ந்த பத்தும்வலார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 2.66. திருஆலவாய் - 011

அற்புதம்: திருநீற்றுப்பதிகம் பாண்டியனின் வெப்பு நோய் நீங்கிய பதிகம்.

பதிகப்பலன்: சுரநோய்கள் அகல

பண் - காந்தாரம் (நவரோசு) தாளம்: ஆதி (12-34-56-78)

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே. 1

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 3

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 4

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. 5

அருத்தம தாவது நீறு அவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வான மளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 6

எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் திருநீறே. 7

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆல வாயான் திருநீறே. 8

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் ஆல வாயான் திருநீறே. 9

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆல வாயான் திருநீறே. 10

ஆற்றல் அடல்விடை யேறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னன் உடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 2.84 திருநனிபள்ளி - 12

அற்புதம்: பாலை நெய்தல் பாடியது. பதிகப்பலன்: பொருள் மற்றும் ஞானம் பெற

பண் - பியந்தைகாந்தாரம் (நவரோசு) தாளம்: ஆதி (12-34-56-78)

காரைகள் கூ.கைமுல்லை களவாகை யீகை
 படர்தொடரி கள்ளி கவினிச்
சூரைகள் பம்மிவிம்மு சுடுகா டமர்ந்த
 சிவன்மேய சோலை நகர்தான்
தேரைக ளாரைசாய மிதிகொள்ள வாளை
 குதிகொள்ள வள்ளை துவள
நாரைக ளாரல்வாரி வயன்மேதி வைகும்
 நனிபள்ளி போலு நமர்காள். 1

சடையிடை புக்கொடுங்கி யுளதங்கு வெள்ளம்
 வளர்திங்கள் கண்ணி அயலே
இடையிடை வைத்ததொக்கு மலர்தொத்து மாலை
 இறைவன் இடங்கொள் பதிதான்
மடையிடை வாளைபாய முகிழ்வாய் நெரிந்து
 மணநாறு நீல மலரும்
நடையுடை யன்னம்வைகு புனலம் படப்பை
 நனிபள்ளி போலு நமர்காள். 2

பெறுமலர் கொண்டுதொண்டர் வழிபாடு செய்ய
 ஒழிபா டிலாத பெருமான்
கறுமலர் கண்டமாக விடமுண்ட காளை
 இடமாய காதல் நகர்தான்
வெறுமலர் தொட்டுவிட்ட விசைபோன கொம்பின்
 விடுபோ தலர்ந்த விரைசூழ்
நறுமல ரல்லிபுல்லி யொலிவண் டுறங்கு
 நனிபள்ளி போலு நமர்காள். 3

குளிர்தரு கங்கைதங்கு சடைமா டிலங்கு
 தலைமாலை யோடு குலவி
ஒளிர்தரு திங்கள்சூடி யுமைபாக மாக
 வுடையா னுகந்த நகர்தான்

குளிர்தரு கொம்மலோடு குயில்பாடல் கேட்ட
பெடைவண்டு தானும் முரல
நளிர்தரு சோலைமாலை நரைகுருகு வைகு
நனிபள்ளி போலு நமர்காள். 4

தோடொரு காதனாகி யொருகா திலங்கு
சுரிசங்கு நின்று புரளக்
காடிட மாகநின்று கனலாடும் எந்தை
இடமாய காதல் நகர்தான்
வீடுட னெய்துவார்கள் விதியென்று சென்று
வெறிநீர் தெளிப்ப விரலால்
நாடுட னாடுசெம்மை யொலிவெள்ள மாரு
நனிபள்ளி போலு நமர்காள். 5

மேகமொ டோடுதிங்கள் மலரா அணிந்து
மலையான் மடந்தை மணிபொன்
ஆகமொர் பாகமாக அனலாடும் எந்தை
பெருமான் அமர்ந்த நகர்தான்
ஊகமொ. டாடுமந்தி யுகளுஞ் சிலம்ப
அகிலுந்தி யொண்பொன் இடறி
நாகமொ டாரம்வாரு புனல்வந் தலைக்கு
நனிபள்ளி போலு நமர்காள். 6

தகைமலி தண்டுசூலம் அனலுமிழும் நாகங்
கொடுகொட்டி வீணை முரல
வகைமலி வன்னிகொன்றை மதமத்தம் வைத்த
பெருமான் உகந்த நகர்தான்
புகைமலி கந்தமாலை புனைவார்கள் பூசல்
பணிவார்கள் பாடல் பெருகி
நகைமலி முத்திலங்கு மணல்சூழ் கிடக்கை
நனிபள்ளி போலு நமர்காள். 7

வலமிகு வாளன்வேலன் வளைவா செயிற்று
மதியா அரக்கன் வலியோ
டுலமிகு தோள்களொல்க விரலா லடர்த்த
பெருமான் உகந்த நகர்தான்

நிலமிகு கீழுமேலும் நிகராது மில்லை
யெனநின்ற நீதி யதனை
நலமிகு தொண்டர்நாளும் அடிபரவல் செய்யும்
நனிபள்ளி போலு நமர்காள். 8

நிறவுரு வொன்றுதோன்றி யெரியொன்றி நின்ற
தொருநீர்மை சீர்மை நினையார்
அறவுரு வேதநாவன் அயனோடு மாலும்
அறியாத அண்ணல் நகர்தான்
புறவிரி முல்லைமௌவல் குளிர்பிண்டி புன்னை
புனைகொன்றை துன்று பொதுளி
நறவிரி போதுதாது புதுவாச நாறு
நனிபள்ளி போலும் நமர்காள். 9

அனமிகு செல்குசோறு கொணர்கென்று கையில்
இடவுண்டு பட்ட அமணும்
மனமிகு கஞ்சிமண்டை யதிலுண்டு தொண்டர்
குணமின்றி நின்ற வடிவும்
வினைமிகு வேதநான்கும் விரிவித்த நாவின்
விடையான் உகந்த நகர்தான்
நனமிகு தொண்டர்நாளும் அடிபரவல் செய்யும்
நனிபள்ளி போலு நமர்காள். 10

கடல்வரை யோதமல்கு கழிகானல் பானல்
கமழ்காழி யென்று கருதப்
படுபொரு ளாறுநாலும் உளதாக வைத்த
பதியான ஞான முனிவன்
இடுபறை யொன்றஅத்தர் பியன்மே லிருந்தின்
இசையால் உரைத்த பனுவல்
நடுவிரு ளாடுமெந்தை நனிபள்ளி யுள்க
வினைகெடுதல் ஆணை நமதே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 2.85. பொது - கோளறு திருப்பதிகம் - 013

அற்புதம்: கோளறு பதிகம். பதிகப்பலன்: நவக்கிரக தோஷம் விலக

பண் - பியந்தைகாந்தாரம் (நவரோசு) தாளம்: ஆதி (12-34-56-78)

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள்செவ்வாய் புதன்வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 1

என்பொடு கொம்பொடாமை இவைமார் பிலங்க
எருதேறி யேழை யுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஒன்பதொ டொன்றோடேழு பதினெட் டொடாறு
முடனாய நாள்க ளவைதாம்
அன்பொடு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 2

உருவளர் பவளமேனி ஒளிநீ றணிந்து
வுமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றைதிங்கள் முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
திருமகள் கலையதூர்தி செயமாது பூமி
திசைதெய்வ மான பலவும்
அருநெதி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 3

மதிநுதல் மங்கையோடு வடபா லிருந்து
மறையோது மெங்கள் பரமன்
நதியொடு கொன்றைமாலை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்

கொதியுறு காலனங்கி நமனோடு தூதர்
கொடுநோய்க ளான பலவும்
அதிகுண நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 4

நஞ்சணி கண்டனெந்தை மடவாள்த னோடும்
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடு முருமிடியு மின்னு
மிகையான பூத மவையும்
அஞ்சிடும் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 5

வாள்வரி யதளதாடை வரிகோ வணத்தர்
மடவாள்த னோடு முடனாய்
நாண்மலர் வன்னிகொன்றை நதிசூடி வந்தே
னுளமே புகுந்த அதனால்
கோளரி யுழுவையோடு கொலையானை கேழல்
கொடுநாக மோடு கரடி
ஆளரி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 6

செப்பிள முலைநன் மங்கையொரு பாகமாக
விடையேறு செல்வ னடைவார்
ஒப்பிள மதியுமப்பும் முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படி. நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 7

வேள்பட விழிசெய்தன்று விடைமே லிருந்து
மடவாள்த னோடு முடனாய்
வாண்மதி வன்னிகொன்றை மலர்சூடி வந்தெ
னுளமே புகுந்த அதனால்

ஏழ்கடல் சூழிலங்கை அரையன்ற னோடு
மிடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 8

பலபல வேடமாகும் பரனாரி பாகன்
பசுவேறு மெங்கள் பரமன்
சலமக ளோடெருக்கு முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
மலர்மிசை யோனுமாலும் மறையோடு தேவர்
வருகால மான பலவும்
அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 9

கொத்தலர் குழலியோடு விசையற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமு மதியுநாக முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
புத்தரோ டமணைவாதி லழிவிக்கு மண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 10

தேனமர் பொழில்கொளாலை விளைசெந்நெல் துன்னி
வளர்செம்பொன் எங்கும் நிகழ
நான்முகன் ஆதியாய பிரமா புரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளுநாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொல் மாலையோதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே. 11

**திருச்சிற்றம்பலம்**

## 2.90. திருநெல்வாயிலரத்துறை - 014

அற்புதம் : முத்துச்சிவிகை சின்னம் குடை பெற்றது. பதிகப்பலன் : செல்வ வளம் பெறுக

பண் - பியந்தைகாந்தாரம் (நவரோசு) தாளம்: ஆதி (12-34-56-78)

எந்தை யீசனெம் பெருமா னேறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 1

ஈர வார்சடை தன்மே லிளம்பிறை யணிந்தவெம் பெருமான்
சீரும் செல்வமு மேத்தாச் சிதடர்கள் தொழச்செல்வ தன்றால்
வாரி மாமல ருந்தி வருபுனல் நிவாமல்கு கரைமேல்
ஆருஞ் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 2

பிணி கலந்தபுன் சடைமேற் பிறையணி சிவனெனப் பேணிப்
பணி கலந்துசெய் யாத பாவிகள் தொழச்செல்வ தன்றால்
மணி கலந்துபொன் னுந்தி வருபுனல் நிவாமல்கு கரைமேல்
அணி கலந்தநெல் வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 3

துன்ன அடையொன் றுடுத்துத் தூயவெண் ணீற்றின ராகி
உன்னி நைபவர்க் கல்லால் ஒன்றுங்கை கூடுவ தன்றால்
பொன்னு மாமணி யுந்திப் பொருபுனல் நிவாமல்கு கரைமெல்
அன்ன மாருநெல் வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 4

வெருகு ரிஞ்சுவெங் காட்டில் ஆடிய விமலனென் றுள்கி
உருகி நைபவர்க் கல்லால் ஒன்றுங்கை கூடுவ தன்றால்
முருகு ரிஞ்சுபூஞ் சோலை மொய்ம்மலர் சுமந்திழி நிவாவந்
தருகு ரிஞ்சுநெல் வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 5

உரவு நீர்ச்சடைக் கரந்த வொருவனென் றுள்குளிர்ந் தேத்திப்
பரவி நைபவர்க் கல்லாற் பரிந்துகை கூடுவ தன்றால்
குரவ நீடுயர் சோலைக் குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
அரவ மாரு நெல்வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 6

நீல மாமணி மிடற்று நீறணி சிவனெனப் பேணும்
சீல மாந்தர்கட் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கோல மாமல ருந்திக் குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
ஆலுஞ் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 7

செழுந்தண் மால்வரை யெடுத்த செருவலி யிராவண னலற
அழுந்த வூன்றிய விரலான் போற்றியென் பார்க்கல்ல தருளான்
கொழுங்க னிசுமந் துந்திக் குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
அழுந்துஞ் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 8

நுணங்கு நூலயன் மாலும் இருவரும் நோக்கரி யானை
வணங்கி நைபவர்க் கல்லால் வந்துகை கூடுவ தன்றால்
மணங்க மழ்ந்துபொன் னுந்தி வருபுனல் நிவாமல்கு கரைமேல்
அணங்குஞ் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 9

சாக்கி யப்படு வாருஞ் சமண்படு வார்களும் மற்றும்
பாக்கி யப்பட இல்லாப் பாவிகள் தொழச்செல்வ தன்றால்
பூக்க மழ்ந்துபொன் னுந்திப் பொருபுனல் நிவாமல்கு கரைமேல்
ஆர்க்குஞ் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே. 10

கறையி னார்பொழில் சூழ்ந்த காழியுள் ஞானசம் பந்தன்
அறையும் பூம்புனல் பரந்த அரத்துறை அடிகள்தம் அருளை
முறைமை யாற்சொன்ன பாடல் மொழியும் மாந்தர்தம் வினையோய்ப்
பறையு மையுற வில்லைப் பாட்டிவை பத்தும்வல் லார்க்கே 11

**திருச்சிற்றம்பலம்**

## 3.04 திருவாவடுதுறை - 015

அற்புதம்: உலவாக்கிழி பெற்றது. பதிகப்பலன்: தடங்கல் விலக பொருளாதாரம் மேம்பட

பண் - காந்தாரபஞ்சமம் (கேதார கௌளை) தாளம்: ஆதி (12-34-56-78)

இடரினுந் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே.
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 1

வாழினும் சாவினும் வருந்தினும்போய்
வீழினும் உனகழல் விடுவேனல்லேன்
தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்
போழிள மதிவைத்த புண்ணியனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 2

நனவினுங் கனவினும் நம்பாவுன்னை
மனவினும் வழிபடல் மறவேனம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனலெரி அனல்புல்கு கையவனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 3

தும்மலோ டருந்துயர் தோன்றிடினும்
அம்மல ரடியலா லரற்றாதென்நாக்
கைம்மல்கு வரிசிலைக் கணையொன்றினால்
மும்மதில் எரியெழ முனிந்தவனே.
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 4

